[9th February 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have, in consultation with the Heads of Departments concerned, examined carefully the various recommendations of the Expert Committee on Marketing Legislation and have arrived at decisions on them. To implement these decisions, a comprehensive Marketing Bill is being drafted and will be introduced in the Legislature shortly.

SRI A. GOVINDASAMY : இந்தக் கமிட்டியார் தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள மணிலா பயிரிடுகிற விவசாயிகளுக்கு நல்ல பொறுக்கு விதை வாங்கித் தருமாறு சிபாரிசு செய்திருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் இப்பொழுது தகவல் இல்லை. தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. K. PALANISAMI : கமிஷன் முறை ஒழிக்கப்படவேண்டும் என்ற முக்கியமான சிபாரிசு சர்க்கார் கொண்டு வரப்போகும் மசோதாவில் இடம் பெறுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தச் சட்டத்தி லட்சியமே அதுதான்.

MR. SPEAKER : The hon. Member must not anticipate what is coming before the Legislature.

SRI A. GOVINDASAMY : ஏற்கனவே தென்னாற்காடு மாவட்டத்தில் மணிலா மார்க்கெட் கமிட்டி விவசாயிகளுக்கு நல்ல பொறுக்கு விதைகளை வழங்கி வந்தது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா? மீண்டும் அந்தப் பொறுக்கு விதைகளைக் கொடுக்க அரசாங்கம் யோசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றித் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. K. PALANISAMI : இந்த மாதிரி மார்க்கெட்டை எல்லா ஜில்லாக்களிலும் விஸ்தரிப்பதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புதிதாக சட்டம் ஏற்படுத்திய பிறகு எல்லா ஜில்லாக்களுக்கும் இந்த மார்க்கெட் வசதி ஏற்படுத்துவது என்பது சர்க்காரின் நோக்கம்.

### *Special Police Forces*

* 144 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the present strength of—

(i) the Special Armed Police in the State; and

(ii) the Malabar Special Police retained in this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (i) The strength of the Special Armed Police is one Headquarter company and 14 active companies (including companies formed of Tamilian Personnel repatriated from Andhra Pradesh).

(ii) Half Headquarter company and 6 active companies.

SRI N. K. PALANISAMI : இந்த மலபார் ஸ்பெஷல் போலீஸ் என்று இன்னும் தனியாக வைத்துக் கொண்டிருப்பதின் காரணம் என்ன ? ஏன் ஸ்பெஷல் ஆர்ம்டு போலீஸ் என்று பொதுவாக வைக்கக்கூடாது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு இரண்டையும் ஒன்றாகச் சேர்ப்பதிலும் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இப்பொழுது மலபார் ஸ்பெஷல் போலீஸ் என்று முன்னதாக ஏற்படுத்தப்பட்டதில் சில பேர் இன்னும் இருக்கிறார்கள்.

SRI A. A. RASHEED : Sir, when do the Government propose to have a joint Armed Police Force for South India?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot tell the hon. Member when such a common Force will come into existence.

SRI S. LAZAR : Is there a proposal to do away with the Malabar Special Police, Sir?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is at present no such proposal.

*Ex-Criminal Tribes in Tirunelveli district*

* 145 *Q*.—SRI T. VELUCHAMI : Will the Hon. Minister for Public Works be pleased to state—

(*a*) what are the schemes sponsored by the Central Government and the State Government with regard to starting of Industries for the uplift of ex-Criminal Tribes in Tirunelveli district; and

(*b*) the amounts available under the various schemes?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) A lump sum provision of Rs. 2 lakhs has been made for the starting of small scale industries like the manufacture of bricks, tiles, hume pipes, etc., for the welfare of ex-Criminal Tribes in the State during the current year. The detailed schemes for the Tirunelveli district are still under the investigation of the Director of Industries and Commerce.

SRI A. R. SUBBIAH MUDALIAR : செங்கல் தொழிலை சங்கரன் கோயில் பகுதியில் ஆரம்பிக்க சர்க்கார் திட்டமிட்டிருக்கிறதா?

THE HON. SRI P. KAKKAN : எந்த இடத்தில் ஆரம்பிப்பது என்பது பரிசீலனையில் இருக்கிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : இன்னும் பரிசீலனையில் இருக்கிறது என்றால் இதற்காக ஒதுக்கப்பட்ட பணம் இந்த ஆண்டில் செலவு செய்யப்படுமா? அப்படியானால் எப்பொழுது?

MR. SPEAKER : அதை எப்படிக் கேட்க முடியும்?

SRI A. R. SUBBIAH MUDALIAR : மாஜி குற்றப் பரம்பரையினருக்காக அதிக அளவில் சிறு கைத்தொழில்களை ஆரம்பிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI P. KAKKAN : எந்த இடத்தில்?

SRI A. R. SUBBIAH MUDALIAR : சங்கரன்கோயில், நாங்குனேரி, கோயில்பட்டி தாலூகாக்களில்.

THE HON. SRI P. KAKKAN : திருநெல்வேலி ஜில்லாவில் எந்த இடத்தில் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்பதும் பரிசீலனையில் இருக்கிறது என்று முன்பே பதில் சொன்னேன்.